உ

சிவமயம்.

# ஒன்பானொன்பது.

இஃது

சதுரை

அ. சிவசிதம்பரப் பிள்ளை யவர்களால்

தொகுக்கப்பட்டு



முதல் பதிப்பு.




சென்னை-சூளை,

எ. சாமிநாத முதலியாரால்

பாலவிர்த்தி போதினி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை அணா 3.

௧௯௦௬

# OPINION.

Tamil Pandit S. A. Sivachitambaram Pillai whom I have known for some years publishes this pampniet under the name of "Onbauonbadu" or a collection of Eighty-one Select Stanzas from Eighty one different Standard works in Tamil. I was pleased to go through the pamphlet and find it to be a handy work of unsectarian morals useful to those who may not find time to read all the works from which these stanzas are extracted.

Egmore, Madras
15th, May 1906.

P. RAMACHANDRA ROW,
Chief Interpreter, High Court.
AND TAMIL EXAMINER TO
THE MADRAS UNIVERSITY.

# சாத்துகவிகள்.

——)(*)(——

சித்தாந்த சரபம்-அஷ்டாவதானம்

பூவை. கலியாண சுந்தரமுதலியா ரவர்கள்

இயற்றியது.

முன்பாருந் தொகுத்துமகி ழாவகைதன் மூதறிவின் முன்னி யாய்ந்தே
யன்பாக விதிதழீஇ விலக்கொரீஇ வழங்குமற மனைத்துந் தேறி
யொன்பானென் பதுனூலான் றறுதிரட்டிப் பாலியலு முறவகுத்திட்
டின்பார வெளியிட்டா னிருமறிஞ ரிறும்பூதிங் கெய்த மாம்தா.

இவ்வரிய பேருதவி தமிழுலகிற் குபகரித்தோ னெழிற்கொள்மாலை
செவ்விபெற வாய்ந்தசீர் கருணீக குலதிலகன் செறிய ராம
மொவ்வியநற் சதுரைமா நகரருணா சலக்கோமா னுஞற்றி வந்த
திவ்வியவி ரதத்துருவ மாயுதித்துப் புகழ்பரத் தினம்வளர்வோன்.

இலக்கியவி லக்கணமா தியநூல்க ளாராய்ச்சி யினிது நாளுங்
கலக்கமறக் கண்டமுக் கனிரசநேர் கவிகள்பல கழற வல்லோன்
துலக்கமுறச் சிவபத்தி யினிற்றிளைத்து வைதிகநற் றுரிய ஞானம்
பலக்கவுயர் குணசிலன் சிவசிதம் பரப்பேர்கொள் பாவலோனே.



இந்நூல் தொகுத்தார்க்கு
நாகர மலையாள போதகாசிரியராகிய
சா. சுப்புராயச் செட்டியார் அவர்கள்
இயற்றியது.

---

நிலை மண்டில வாசிரியப்பா.

பொன்பா றுவல்லார் மின்னுறு வல்லார்
பொன்போற் புகன்ற நன்னீ திமெயலா
முன்பின் னளவில வாதலி னானு
மின்பாய்க் கற்போர்க் கரிதத னானுந்
தன்பாற் கூடிய வளவே திரட்டி
யொன்பா னென்பதென் றிலக்கண மியைய
வொன்பா னென்பதென் றொருபேர் சூட்டி
யொன்பா னென்பததி காரஞ் சாட்டி
யொன்பா னென்பது றானின் றீட்டிய
வொன்பா னென்பது செய்யுளும் பூட்டி
யொன்பா னென்பதென் றொருநூற் றொகுத்தனன்
அன்பா யவனெவன் கொல்லோ வென்னிற்
றன்பூஞ் சதுரைத் தூய்சீர் கருணை
ரின்புறு மரபி லெழிற்கணி தக்கட
லுன்பட் டப்பெய ருடையரு ணசலன்
றன்பேழ் வாத்துதி தக்கோன் மிக்கோன்
பொன்பதி சொர்க்க புரவா தீன
மன்புகழ் திருச்சிற் றம்பல ஞானி
தன்பே ரருளைப் பெற்றவ னொருகா
லென்பா லுங்கலை யிரண்டுணர்ந் தவனவன்
றன்பேர் சிவசி தம்பரப்
பண்டிதன் மன்னே! பண்டிதன் மன்னே!

---





திருவருட்செயல்.

# ஒன்பானெண்பது.

## அருட்பால்.

## ஓம்பியல்.

### 1-ம் (அதிகாரம்) கடவுள்வாழ்த்து.

உலகம் படைப்பித் தளிப்பித் தொழிப்பித்
திலகுமுயி ருள்ளெம் மிறை.

அட்டாங்கயோகக்குறள்.

### 2-ம் (அதி) வான்சிறப்பு.

இழிந்த மாந்தர்கைப் பொருள்களு மிகபரத் தாசை
கழிந்த யோகியர் கைப்படிற் றூயவாய்க் களங்கம்
மொழிந்த வாறுபோ லுவரியுண் டுவர்கெடுத் தெழிலி
பொழிந்த நீரமு தாயின புவிக்கும் வானவர்க்கும்.

திருவிளையாடற்புராணம்.

### 3-ம் (அதி) நீத்தார்பெருமை.

கரிய மாலினுங் கண்ணுத லானினு
முரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமோ ரைந்தினு மெய்யினும்
பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்.

இராமாவதாரம்.

### 4-ம் (அதி) பெறுதற்கருமை.

அரிது! அரிது! மானிடராத லரிது
மானிட ராயினுங் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்த லரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமுஞ் செல்வமு நயத்த லரிது
ஞானமுஞ் செல்வமு நயந்த காலையில்
தானமுந் தவமுந் தான்செய லரிது
தானமுந் தவமுந் தான்செய்வா ராயின்
வானவர் நாடு வழிதெரிந் திடுமே.

தனிப்பாடற்றிரட்டு.

---

## அறத்துப்பால்.

# இல்லறவியல்.

### 5-ம் (அதி) இல்வாழ்க்கை.

மருவிய காதன் மனையாளுந் தானு
மிருவராய்ப் பூண்டுய்ப்பி னல்லா—லொருவரா
லில்வாழ்க்கை யென்னு மியல்புடைய பொற்சகடஞ்
செல்லாது தெற்றித்து நின்று.

அறநெறிச்சாரம்.

### 6-ம் (அதி) மகளிரின்பம்.

பெண்ணலத்தினைப் பெறுதவர் மகவினைப் பெறுதார்
பெண்ணலத்தினைப் பெற்றவ ரோமகப் பெற்றார்
பெண்ணலத்தினன் மகவுபெற் றிருமையும் பெறுவார்
பெண்ணலத்தின லன்றியோர் பெறும்பொரு ளின்றே.

பிரம்மோத்திரகாண்டம்.

### 7-ம் (அதி) வாழ்க்கைத்துணைநலம்.

எப்பணியா லின்புறுவர் காதலரக் காதலரை
யப்பணியா லப்பொழுதே யன்புறுத்தி—யொப்ப
மனங்குழையும் வண்ண மகிழ்விப்ப தன்றே
கனங்குழையார் தங்கள் கடன்.

பெருந்தேவனார்பாரதம்.

8-ம் (அதி) கற்பு.

பெண்டமைப் பேணுப் பெருந்தகைமை பீடுடைமை
நாணுடுக்க மென்றைந்து நண்ணின்ருய்ப்—பூணுடுக்கும்
பொன்வரைக் கொங்கைமுலைப் பூந்திருவே யாயினுந்
தன்வரைத் தாழ்த்த லரிது.

சிறுபஞ்ச மூலம்.

9-ம் (அதி) அறன்வலியுறுத்தல்.

நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்து
சாற்றக் கேண்மின் சாற்றக் கேண்மின்
மனிதற்கு வயது நூறல்ல தில்லை
பைம்ப திரவி லகலுந் துயிலினல்
ஒட்டிய விளமையி லோரைந்து நீங்கும்
ஆக்கை யிளமையி லைம்மூன்று நீங்கும்
எழுபது போகநீக் கிருப்பன முப்பதே
அவற்றுள்
இன்புறு நாளுஞ் சிலவே யதாஅன்று
துன்புறு நாளுஞ் சிலவே யாதலால்
பெருக்கா றொத்தது செல்வப் பெருக்காற்
றிடிகரை யொத்த திளமை யிடிகறை
வாழ்மர மொத்தது வாழ்நா ளாதலால்
ஒன்றே செய்யவும் வேண்டு மொன்றும்
நன்றே செய்யவும் வேண்டும் நன்றும்
இன்றே செய்யவும் வேண்டு மின்றும்
இன்னே செய்யவும் வேண்டு மின்னும்
நாளை நாளை யென்பீ ராகில்
நமனுடை முறைநா ளாவது மறியீர்
எப்போ தாயினுங் கூற்றுவன் வருவான்
அப்போ தந்தக் கூற்றுவன் றன்னைப்
போற்றவும் போகான் பொருளொடும் போகான்
சாற்றவும் போகான் றமரொடும் போகான்
நல்லா ரென்ன நல்குர வறியான்
தீயாரென்னான் செல்வரென் றுன்னான்
தரியா னெருகணந் தறுக ணாளன்.

கபிலரகவல்.

### 10-ம் (அதி) அன்னதானம்.

கரிபரி யாயி ரங்கள் கனத்தகோ தானம் பூமி
பரிவொடு ரசித சொர்ண பாத்திரம் பணமா மென்று
யிருகுல மொத்த கன்னி கோடிதா னீந்திட் டாலும்
அரிதிது வென்றே யன்ன தானமே யதிக மாமே.

நீதிசாரம்.

### 11-ம் (அதி) புதல்வரைப்பெறுதல்.

படைப்புப் பலபடைத்துப் பல்லாரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்
பயக்குறை யில்லைதாம் வாழு நாளே.

புறநானூறு.

### 12-ம் (அதி) விருந்தோம்பல்.

இன்சொன் மடமாட்சி யிடமினிதூண் யாரியார்க்கும்
வன்சொற் களைந்து வகுப்பானேன்—மென்சொன்
முருந்தேய்க்கு முட்போ லெயிற்றினுய் நாளும்
விருந்தோர்ப்பார் விண்ணோர் விரைந்து.

ஏலாதி.

### 13-ம் (அதி) அன்புடைமை,

அன்பு வாய்ந்த வுயிர்நிலை யஃதிலார்க்
கென்பு தோலுடற் போர்த்ததென் றன்புறை
யின்பு தோய்ந்த நிலையெனத் தானிவண்
டுன்பு காய்ந்த வுயிர்த்துணை யாயினன்.

திருவானைக்காபுராணம்.

### 14-ம் (அதி) இனியவைகூறல்.

இன்சொலா னாகுங் கிழமை யியல்பிலா
வன்சொலா னாகும் பகைமைமன—மென்சொல்லி
னுவினு னாகு மருண்மன மம்மனத்தான்
வீவிலா வீடாய் விடும்.

நான்மணிக்கடிகை.

### 15-ம் (அதி) செய்ந்நன்றியறிதல்.

தினையனைத்தே யாயினுஞ் செய்தநன் றுண்டாற்
பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர்—பனையனைத்
தென்றுஞ் செயினு மிலங்கருவி நன்னாட
நன்றில நன்றறியார் மாட்டு.

நாலடியார்.

### 16-ம் (அதி) நடுவுநிலைமை.

கோதி லாதவர் மக்கண் மாக்களு
மேதி லாதவ ரியைந்த தீமையா
லாத லாற்றமர் பிறர்க ளென்பதாங்
கோதி னுலவர்க் குள்ள தில்லையே.

சூளாமணி.

### 17-ம் (அதி) அடக்கமுடைமை.

வாயி னடங்குத றுப்புரவா மாசற்ற
செய்கை யடங்குத றிப்பியமாம்—பொய்யின்றி
நெஞ்ச மடங்குதல் வீடாகு மிம்மூன்றும்
வஞ்சத்திற் றீர்ந்த பொருள்.

திரிகடுகம்.

### 18-ம் (அதி) ஒழுக்கமுடைமை.

பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு
நிலக்கிழமை மீக்கூற்றங் கல்விநோ யின்மை
யிலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்று
மொழுக்கம் பிழையா தவர்.

ஆசாரக்கோவை.

### 19-ம் (அதி) பொறையுடைமை.

கறுத்தாற்றித் தம்மைக் கடியசெய் தாரைப்
பொறுத்தாற்றிக் கொள்ளல் புகழால்—ஒறுத்தாற்றில்
வானேங்கு மால்வரை வெற்ப பயமின்றே
தானேன் றிடவருஞ் சால்பு.

பழமொழி.

### 20-ம் (அதி) ஒப்புரவறிதல்.

உலகத்தா ருள்ளதென்ற துள்ளதா மொலிநீர் வேலை
உலகத்தா ரில்லதென்ற தில்லையா முணருங் காலை
உலகத்தா ருள்ளதென்ற தில்லையென் றுரைக்கு மாகின்
உலகத்துக் கவன்பே யாகு முண்மையாற் பயனென் றில்லை.

இராமாயணம்.

### 21-ம் (அதி) ஈகை.

மின்னுந் தமனியமும் வெற்றிரும்பு மோரினமாய்ப்
பொன்னின் பெயர்படைத்தாற் போலாதே—கொன்னே
யொளிப்பாரு மக்களா யொல்லுவ தாங்கே
யளிப்பாரு மக்களா மாறு.

பெரும்பொருள்விளக்கம்.

### 22-ம் (அதி) புகழ்.

கையை விரித்தழைக்கக் கண்டுகுழந் தைச்சோமன்
செய்யசுட்டி யீந்தான் றினகரா—பையவே
தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

தினகரவெண்பா.

---



## துறவறவியல்.

### 23-ம் (அதி) அருளுடைமை.

பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய் கண்டுள்ள
மெரியி னிழுதாவ ரென்க—தெரியிழாய்!
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கழுழுமே கண்.

நன்னெறி.

24-ம் (அதி) தவம்.

நீர்(ப்)பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்
சோர்சடை தாழச் சுடரோம்பி—யூரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி.

வெண்பாமாலை

25-ம் (அதி) வாய்மை.

நாக்கிலிரண் டுண்டேவாய் நற்றெழிலின் செற்றுணர்வேன்
தூக்கினுப்பூ ணுண்டதுண்டோ வென்னுஞ்சொ--லாக்கு
மணங்கதனுக் கேயடங்கா வண்டவுண்டை புண்டோ
வினங்கா வுலகநடை யின்று.

முத்துறைமுப்பத்தாறு.

26-ம் (அதி) நிலையாமை.

நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று.

நீதிநெறிவிளக்கம்.

27-ம் (அதி) துறவு.

வாழ்கின்ற மக்களுநம் வழிநின்ற ரென்னவுள்ளந்
தாழ்கின்றா் தாழ்கில்லார் தமரில்லா வானக்கா
லாழ்கின்ற குழிநோக்கி யாதார மொன்றின்றி
வீழ்கின்றர் மெய்யதா மெய்தாங்க வல்லரே.

நா[illegible]தசரிதை.

28-ம் (அதி) மெய்யுணர்தல்.

விண்ணி லின்பமும் வீதலி கேட்டமோன்
மண்ணி லின்பமும் மாய்தல் காண்டுமா
லெண்ணி லின்பமா மீறி லாததே
நண்ணி நாமினி நயக்கற் பாலதே.

சாந்திபுராணம்.

### 29-ம் (அதி) ஊழ்.

அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற் ருவதூஉ
முரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலு
மூழ்வினை யுருத்துவந் தாட்டுமென் பதூஉஞ்
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதி கார மென்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்.

சிலப்பதிகாரம்.

### 30-ம் (அதி) பேரின்பம்.

தன்றத் துவக்கா யத்தியல்பும்
   தனக்காந் துணையு மோர்ந்துலகி
லொன்றக் குறிக்கும் பொன்னுசை
   யுன்னிட் டவற்றால் வருதுயருந்
துன்பப் பிறப்பு மிறப்புமிவை
   தொலையத் தொலையாப் பொருள்குறித்துன்
அன்பின் செயலே யினியடியேற்
   கருளென் றோர்தல் பேரின்பமே.

உசிதசூடாமணி.

—

## பொருட்பால்.

## அரசியல்.

### 31-ம் (அதி) இறைமாட்சி.

சீற்றஞ் செற்றுப் பொய்நீக்கிச் செங்கோலினாற்
கூற்றங் காய்ந்து கொடுக்கவெ னுந்துணை
மாற்ற மேநவின் றான்றடு மாற்றத்துத்
தோற்றந் தன்னையுங் காமுறந் தோன்றினன்.

குண்டலகேசி.

32-ம் (அதி) கல்வி.

நிலையினிற் சலியா நிலைமை யானும்
பலவுல கெடுத்த வொருதிறத் தானும்
நிறையும் பொறையும் பெறுநிலை யானும்
தேவர் மூவருங் காவ லானும்
தமனியப் பராரைச் சயில மாகியும்
அளக்கவென் றமையாப் பரப்பின தானும்
முள்ளுடைக் கோட்டு முனையெறி சுறவம்
அதிர்வளை தடியு மளக்க ராகியும்
நிறையுளங் கருதி நிகழ்பவை நிகழ்பவை
தருதலின் வானத் தருவைந் தாகியும்
மறைவெளிப் படுத்தலின் கலைமக ளிருத்தலின்
அகமலர் வாழ்தலிற் பிரம னாகியும்
உயிர்புரந் தளித்தலிற் புலமிசை போக்கலில்
படிமுழு தளந்த நெடியோ னாகியும்
இறுதியிற் சலியா திருத்த லானும்
மறுமைதந் துதவு மிருமை யானும்
பெண்ணிடங் கலந்த புண்ணிய னாகியும்
அருள்வழி காட்டலி னிருவிழி யாகியும்
கொள்ளுநர் கொள்ளக் குறையா தாதலின்
நிறையுள நீங்கா துறையரு ளாகியும்
இவைமுத லாகி யிருவினை கெடுக்கும்
புண்ணியக் கல்வி யுண்ணிகழ் மாக்கள்
பரியுரக் கம்பலை யிருசெவி யுண்ணும்
குடக்கோச் சேரன் கிடைத்திது காண்கென
மதிமலி புரிசைத் திருமுகங் கூறி
அன்புருத் தரித்த வின்பிசைப் பாணன்
பெறநிதி கொடுக்கென வுறவிடுத் தருளிய
மாதவர் வழுத்துக் கூடற் கிறைவன்
இருசரண் பெறுகுநற் போலப்
பெருமதி நீடுவர் சிறுமதி நூதலே.

கல்லாடம்.

## 33ம் (அதி) கேள்வி.

காலலைக்குக் கொடிமாடக் கடிநகரந் தனைபுரக்குங்
கனக மோலி
வேலலைக்குங் கரத்தானை வெயிலலைக்கு மணியானை
விளங்கு ஞான
நூலலைக்கு நாவானை நுவலரிய குணத்தானை
நுணங்கு கேள்வி
யாலலைக்குஞ் செவியானை யறமலைக்கு மனத்தானை
யகந்து யானை.

குணாகரம்.

## 34-ம் (அதி) அறிவுடைமை.

எள்ளா திருப்ப விழிஞர்போற் றற்குரியர்
விள்ளா வறிஞரது வேண்டாரே—தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல்.

மூதுரை.

## 35-ம் (அதி) பெரியாரைத் துணைக்கோடல்.

பெரியாரைத் துணைக்கொ டில்லையந் தணர்பொய்
யடிமையி லாதவப் புலவர்
உரிதான பத்த ரெழுவருங் கூட
வொன்பது பேருமன் றியிலே
விரிவுசெஞ் சடைய ரிசைஞானி கூட
வேயறு பத்துமூன் றன்பர்
அரியரி கங்கை கோகிரி மேவும்
ஆதிசத் தீசனு யகனே.

கோபருவதமாலை.

## 36-ம் (அதி) வலியறிதல்.

ஆர்கலி ஞாலத் தறங்காவ லாற்சிறந்த
பேரருளி னூர்க்குப் பெறவருமை—யாதரோ!
வார்திரைய மாமகர வெள்ளத்து நாப்பண்ணும்
போர்மலைந்து வெல்லும் புகழ்.

இரும்பல்காஞ்சி.

37-ம் (அதி) காலமறிதல்.

காகம் பகற்காலம் வென்றிடுங் கூகையைக்
 கனமுடி யரசர் தாமும்
கருதுசய காலமது கண்டந்த வேளையிற்
 காரிய முடித்து விடுவார்
மேகமுங்;கார்கால மதுகண்டு பயிர்விளைய
 மென்மேலு மாரி பொழியும்
மிக்கான வறிவுளோர் வருதருண காலத்தின்
 மிடியாளருக் குதவுவார்
நாகரிக முறுகுயில் வசந்த காலத்திலே
 நலமென் றுவந்து கூவும்
நல்லோர் குறித்ததைப் பதறும லந்தந்த
 நாளையின் முடிப்பர் கண்டாய்
வாகனைய காலைதன் மாலைபுல் லெனுமுலக
 வாடிக்கை நிசமல்லவோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே.

குமரேசசதகம்.

38-ம் (அதி) இடனறிதல்.

இழைபொறை யாற்ற கில்லா
 திட்டிடை தாழா நின்ற
குழைமுக நிறத்தி னார்போற்
 குறித்ததே துணிந்து செய்யார்
முழையுறை சிங்கம் பொங்கி
 முழங்கிமேற் பாய்ந்து மைதோய்
வழையுறை வனத்து வன்க
 ணரிவலைப் பட்ட தன்றே.

சிந்தாமணி.

39-ம் (அதி) தெரிந்துசெயல்வகை.

யாதொரு கரும மேனு மெண்ணியே துணிக வென்றுங்
காதலிற் றுணிந்து செய்தா லெண்ணுதற் கடனன்றென்று
மோதுநூற் புலவர் சொன்ன ருமக்குள வுணர்வற் றன்றே.
பேதுற வடர்த லும்பின் னுருகினீர் பிழைசெய் தீரே.

பாரதம்.

### 40-ம் (அதி) சுற்றந்தழால்.

தீதி லரிட்டங்கள் செய்யவுண வைக்கொள்ள
மேதினியிற் றம்மினத்தை மேவுதலால்—நீதிநெறி
போற்றுபுகழ் புன்னைவனப் பூபாலா வுற்றுரை
மாற்றிருமெய் ஙப்போல் வளை.

ஆத்திச்சூடிவெண்பா.

### 41-ம் (அதி) செங்கோன்மை.

அறம்புரிந் தன்றம்ம வரசிற் பிறத்த
தறுத்த தொடர்பொடு துன்னிய கேண்மை
சிறந்தார்க் கும்பாடு செயலீயார் தத்தம்
பிறந்தவேல் வென்றிப் பொருட்டு.

தகடூர்மாலை.

### 42-ம் (அதி) ஆண்மை.

உறுக ளத்தினி லுன்னிய தாண்மையும்
பெருபொருட் சூழ்ந்த பீடுடைக் கல்வியும்
தறுகண் வேழந் தடக்கிய பெற்றியும்
மறுவில் வீணையின் வாச்சனல் விச்சையும்.

உதையணகுமாரகாவியம்.

### 43-ம் (அதி) முயற்சி.

மானிட னொருவன் றனக்கருஞ் செல்வம்
வாய்க்கவென் றுனுதின முயற்சி
தானுஞற் றுவனேற் கடவுளு மதனைத்
தந்தனிக் குறுமதா லன்றே
வானபே ரறிஞர் திருவினை முயற்சி
யாக்குமம் முயற்சியில் லாமை
யீனமா ரின்மை புகுத்திடு மாலென்
றியாருநன் குணர்தர நவில்வார்.

குசேலோபாக்கியானம்.

### 44-ம் (அதி) தீரம்.

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

திருக்குறள்.

### 45-ம் (அதி) பகைமாட்டேப்பயனடைதல்.

பகைசேரு மெண்ணான்கு பற்கொண்டே நன்னு
வகைசேர் சுவையுருந்து மாபோற்—றெகைசேர்
பகைவரிட மெய்யன்பு பாவித் தவராற்
சுகமுறுத நல்லோர் தொழில்.

நீதிவெண்பா.

### 46--ம் (அதி) ஒற்றுடல்.

ஒற்றினு னொற்றிப் பொருடெரிதன் முன்னினிதே
முற்றான் றெரிந்து முறைசெய்தன் முன்னினிதே
பற்றிலனுப் பல்லுயிர்க்கும் பார்த்துற்றுப் பாங்கறிதல்
வெற்றிவேன் மன்னர்க் கினிது.

இனியநாற்பது

### 47-ம் (அதி) தண்டோபாயம்.

அறிவினர்க்கு நீதியறி விப்பதன்றி யதிகாரங்
காட்ட வேண்டாம்
அறிவினற்கு நீதிதெரி யாதெனினு ஞானத்தைத்
தெரிய வேசொல்
அறிவிக்குங் காலவர்க ளணைபுரண்டா லதிகாரங்
காட்ட வேண்டும்
அறிந்துதுணிந் துரைத்தாமிந் நீதியீ திரண்டு
மறிஞ ரறிவார்.

நீதிசாரானுபவத்தெருட்டு.

——[*]——

# அங்கவியல்,

## 48-ம் (அதி) அமைச்சு.

அரசர்க் கமைச்ச ரவயவ மலவோ
வுறுப்புக டாமே யுயிரினை யுண்ண
வொறுப்படில் விலக்குவ ருளரோ தன்னயம்
மறந்து மன்னுயிர்ச் சுகமே மதித்தங்
கிறந்தசிந் தையனே யிவனே வமைச்ச
னுண்மைக் குறைவிடந் திண்மைக் கணிகலஞ்
சத்திய வித்து பத்தியுன் மத்தன்
ஆள்வினை தனக்காள் கேள்விதன் கேள்வன்
றற்புகழ் கேட்ப வற்பமு மியையான்.

மனோன்மணீயம்.

## 49-ம் (அதி) சொல்வன்மை.

அறிசொல்லை விரிப்பதுவு மறிய வேண்டும்
அதுவன்றி யடிப்பதுவு மறிய வேண்டும்
அறியொருவர் மெச்சுஞ்சொன் மொழிய வேண்டும்
அதுவன்றி நகைக்குஞ்சொன் மொழிய லாகா
அறியொருவன் றெளியுடலை யறிய வென்றால்
அவன்சொற்கொண் டேயெதிர்த்தே யறிய வேண்டும்
அறிசொல்லும் பொருளுமென விரண்ட தாகும்
அதுவன்றி தொழில்பயனு மிரண்ட தாமே.

நீதிசாரக்கரு.

## 50-ம் (அதி) தூது.

எப்பொரு ளாயினும் யாவ ருள்ளமுங்
கைப்படு நெல்லியங் கனியிற் காணுநீர்
துப்பிதழ் மடந்தைபாற் றூது போகெனச்
செப்பிய தெவன்கொலென் சிந்தை யோர்ந்துமே.

நைடதம்.

### 51-ம் (அதி) வினைத்தூய்மை.

மறைநீதி யுற்ற புறநா டழித்து
வருசேனை யாள்வ தறியேம்
மறைநீதி முற்று முணரா வமைச்சை
யணிவாயில் வைத்து மறியேங்
குறையே யிழைத்து வினையே விளைத்த
குடிவைத் திருந்து மறியே
மிறையே தவத்தின் விளைவோ யெமக்கு
மிதுவோ விதித்த விதியே.

அரிச்சந்திரபுராணம்.

### 52-ம் (அதி) அவையறிதல்.

குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையின்
காத லின்பத் துடங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநாக வைகி வைகலு
மழுக்கறின் மையவா வின்மை யென்றுங்
கிருபெரு நிதியமு மொருதர மீட்டுந்
தோலா நாவின் மேலோர் பேர்வை
யுடன்மரீஇ யிருக்கை யொருநாள் பெறுமெனிற்
பெறுகதில் லம்ம யாமே வான்முறைத்
தோன்றுவழித் தோன்று வழிப்புலவுப் பொதிந்து
ஞாங்கர் ஞாங்கர் நின்றுழி நில்லாது
நிலையழி யாக்கை வாய்ப்பவிம்
மலர்தலை யுலகத்துக் கோட்டும் பிறப்பே.

ஆசிரியமாலை.

### 53-ம் (அதி) சான்றாண்மை.

இன்பம தடைந்தகாலை யினிதென மகிழ்ச்சி யெய்தார்
துன்பம துற்றபோதுந் துண்ணெனத் துளங்கிச் சோரா
ரின்பமுந் துன்பந்தானு மிவ்வுடற் கியைந்த வென்றே
முன்புறு தொடர்பை யோர்வார் முழுவது முணர்ந்த நீரார்.

கந்தபுராணம்.

## 54-ம் (அதி) நாடு.

திருவுடைத் தம்ம பெருவிறற் பகைவர்
பைங்கண் யானைப் புணர்நிரை துமிய
வுரந்தூர்ந் தெறிந்த கறையடிக் கழற்காற்
கடுமான் மறவர் கமழ்தொடை மறப்ப
விளைவினிது தந்த விளைவுமுட் டுறாது
புலம்பா வுறையு ணீதொழி லாற்றலின்
விடுநிலக் காம்பை விடரளை நிறையக்
கோடை நீடக் குன்றம் புல்லென
வருவி யற்ற பெருவறற் காலையு
நிவந்து கரைய யிழிதரு நனந்தலைப்
பேளர் யாற்றுச் சிருடை வியன்புலம்
வாஅய் பரந்து தீய் யருவிலே
சூடி யுருத்து வருமவிர் நிறையச்
செந்நீர்ப் பூச லல்லது
வெம்மையறி யாநின் னகன்றலை நாடே.

பதிற்றுப்பத்து.

## 55-ம் (அதி) நகர்.

மைந்தரோ டூடி மகளிர் திமிர்ந்திட்ட
குங்குமவீ ரஞ்சாந்தின் சேறிழுக்கி—யெங்குந்
தடுமாற லாகிய தன்மைத்தே தென்னே
னெடுமாடக் கூட லகம்.

முத்தொள்ளாயிரம்.

## 56-ம் (அதி) பொருள்செயல்வகை.

கல்லானே யானலுங் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வா—ரில்லானை
யில்லாளும் வேண்டாண்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயின் சொல்.

நல்வழி.

57-ம் (அதி) நட்பு.

அழிதரு நெறியிற் செலவினை விலக்கி
யாம்வழிச் செலுத்தியூழ் வினையா
லழிவுவந் திடுப்பி னதற்குட னல்லாந்
தாக்கைவே றன்றியாருயிர்க
ளொழிவகை யின்றி யுணர்ச்சியொத் தருநூ
லுணர்தொறு முறுநயம் போலக்
கழிமகிழ் நாளும் பயிறொறும் வளரக்
கலப்பதே நட்பெனப் படுமால்.

விநாயகபுராணம்.

58-ம் (அதி) மருந்து.

திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமற்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காம—லுண்ணுங்கா
னீர்கருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்
பேருரைக்கிற் போமே பிணி.

பதார்த்தகுணசிந்தாமணி.

59-ம் (அதி) குடிமை.

தலையெனு முடற்கொரு தலைவ னேதலை
நரர்பல வுறுப்புக ணலங்கொள் கையது
சிரமுறும் பொறிவழிச் செல்லுந் தன்மைபோல்
உரவர சனுக்கமைந் தொழுகும் வையமே.

நீதிநூல்.

60-ம் (அதி) பண்புடைமை.

கூறிய வல்ல வேறுபிற தோன்றினும்
கூறி யவற்றொடு கூட்டிக் குறிக்கொளக்
கூறி யுணர்த்தல் குணத்தோர்க் கியல்பே.

அகப்பொருள்விளக்கம்.

61-ம் (அதி) உழவு.

தொழுதூண் சுவையி னுழுதூ ணினிது.

கொன்றைவேந்தன்.

### 62-ம் (அதி) மரபு.

எப்பொருளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பினா ரப்படிச் செப்புதன் மரபே.

நன்னூல்.

### 63-ம் (அதி) வாணிபம்.

முதலுள பண்டங் கொண்டு வாணிபஞ்செய்
தீதன்பய னுண்ணு வணிகரும் பதரே.

நறுந்தொகை.

## ஒழிபியல்.

### 64-ம் (அதி) இன்னா.

பொருளுணர்வா ரில்வழிப் பாட்டுரைத்த லின்னா
இருள்கூர் சிறுநெறித் தாந்தனிப்போக் கின்னா
இருளிலார் தங்கட் செலவின்னா வின்னா
பொருளிலார் வண்மை புரிவு.

இன்னாநாற்பது.

### 65-ம் (அதி) மறுமணம்.

பதியை யிழந்தமங்கை பன்மக்க டோய்தல்
விதியோ மறுமணமே மேல்.

அகவிருளொழிக்குமாதித்தன்.

### 66-ம் (அதி) குற்றகங்கடிதல்.

கள்ளன் மின்களவாயின யாவையுங்
கொள்ளன் மின்கொலை கூடி வருமற
மெள்ளன் மின்னில ரென்றெணி யாரையு
நள்ளன் மின்பிறர் பெண்ணொடு நன்னான்மின்.

உலோயாபதி.

### 67-ம் (அதி) வினைத்திட்பம்.

செய்வானுஞ் செய்வினையுஞ் சேர்ப்பயனுஞ் சேர்ப்பவனு
முய்வா ருளனென் றுணர்.

திருவருட்பயன்.

### 68-ம் (அதி) பாவஞ்செய்தலால் வருங்கதி.

வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து
பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட—விற்றைக்கு

மில்லையோ பாவி பிறவாமை யென்றெடுத்து
நல்லதோ ரின்சொ னடுவாகச்—சொல்லியிவர்

செய்திக்குத் தக்கச் செயலுறுத்து வீரென்று
வெய்துற் றுரைக்க விடைகொண்டு—மையறருஞ்

செக்கினிடைத் திரித்துந் தீவாயி லிட்டெரித்துந்
தக்க நெருப்புத்தூண் டழுவுவித்து—மிக்கோங்கு

நாராசங் காய்ச்சிச் செவிமடுத்து நாவரிந்து
மீராவுன் னூனைத்தின் னென்றடித்து—மேராம

லங்காழ் நரகத் தழுத்துவித்தும் பின்னுந்தம்
வெங்கோப மாறாத வேட்கையரா—யிங்கொருநா

ளெண்ணிமுதற் காணாத வின்னற் கடுநரகம்
பன்னெடுநாட் செல்லும்—பணிகொண்டும்

போற்றிப்பஃறொடை.

### 69-ம் (அதி) சாத்திரப்பிரயோசனம்.

சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் றன்வசன
மாத்திரத்தே வாய்த்தவளம் வந்துறுமே—யார்த்தகடற்
றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாயிதனைச் செப்பு.

திருக்களிற்றுப்படியார்.

### 70-ம் (அதி) பெற்றோரைப் பேணல்.

தந்தைதாய்ப்பேண்.

ஆத்திசூடி.

### 71-ம் (அதி) உலகம்ஒருசமயம்போலிராது.

ஆராயும் வேளையிற் பிரமாதி யானுலு
மையவொரு செயலு மில்லை
யமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர
ராமென விருந்த பேரு
நேராக வொருகோப மொருவேளை வரவந்த
நினைவொன்று மில்லா மலே
நெட்டுயிர்த் துத்தட்டு தடுமாறு வார்வசன
நிர்வாக ரென்ற பேரும்
பூராய மாயொன்று பேசுமிட மொன்றைப்
புலம்புவார் சிவராத் திரிப்
போதுதுயி லோமென்ற விரதியரு மரிதுயிற்
போலேயி ருந்து துயில்வார்
பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே
பார்க்கிநின் செயலல் லவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே.

தாயுமானவர்பாடல்.

### 72-ம் (அதி) உபயப்புகழிகழ்.

எத்தகைப் புலமைத் திறமைதோய்ந் துறினு
மிசைத்தவா றியற்றுமாண் பிலரோ
லத்தனைப் புகழு மிகழ்ச்சியா முடியு
மாதலின் மாதையூ ரழகர்
பத்தர்தா முறுப்பிற் குறைவுளா ரெனினும்
பழுதுறு ரேனையோர் பழைய
சித்தச னனையா ராயினும் பலருஞ்
சீயெனச் சிரிப்பநா ணுவரோ.

திருவாமத்தூர் புராணம்.

### 73 ம் (அதி) மிதியாவிடன்.

மதியாதார் தலைவாயில் மிதிக்கவேண்டாம்.

உலக நீதி.

### 74-ம் (அதி) நாளுந்துயர்தருவது.

தட்டா னிடத்திற் றங்கப் பணிகள் சமைப்பதுவும்
வட்டாடு வாரைத் திருத்திநன் மார்க்கத்தில் வைப்பதுவும்
பட்டாங்கு காகிதப் புத்தக மச்சிற் பதிப்பதுவும்
தொட்டார் மனத்தைப் பலவாறு நாளுந் துயர்செய்வதே.

விவேகசிந்தாமணி.

### 75-ம் (அதி) தீயார்க்குநல்ல கூறுதோழிதல்.

குட்டித் திரட்கரடி யாறெழிகக் கோன்குதித்துக்
கட்டிப் புதைந்த கதையாகும்—துட்டமலப்
பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்குப்
புத்திபோற் காட்டும் பொருள்.

ஒழுவிலொடுக்கம்.

### 76-ம் (அதி) நிவிர்த்தி.

பேதைமை மீளச் செய்கை மீளுஞ்
செய்கை மீள வுணர்ச்சி மீளு
முணர்ச்சி மீள வருவுரு மீளு
மருவுரு மீள வாயின் மீளும்
வாயின் மீள வூறு மீளு
மூறு மீள நுகர்ச்சி மீளு
நுகர்ச்சி மீள வேட்கை மீளும்
வேட்கை மீளப் பற்று மீளும்
பற்று மீளக் கருமந் தொகுதி
மீளுங் கருமத் தொகுதி மீளத்
தோற்ற மீளுந் தோற்ற மீளப்
பிறப்பு மீளும் பிறப்புபிணி மூப்புச்
சாக்காடவல மாற்று கவலை
கையா றென்றிக் கடையி றுன்ப
மெல்லா மீளுமிவ் வகையான் மீட்சி.

மணிமேகலை.

### 77-ம் (அதி) பன்னெறி.

தானஞ் சீல மேபொறை தக்க தாய வீரிய
மூன மிற்றி யானமே யுணர்ச்சி யோடு பாயமு

மான மில்ல ருளினை வைத்த லேவ லிமையு
ஞான மீரைம் பார மிதை நாடுங் காலி வைகளும்.

நிலகேசித்திரட்டு.

### 78-ம் (அதி) வினைச்செயல்.

அன்னிய மாதர் தம்மை யணைவதே பாவ மேனுந்
தன்னிலக் கில்லா வினைத் தையலைப் புணர்ந்தோ ரென்று
மின்னலா நரகாரண்ணி யேங்குவ துண்மை யன்றி
யுன்னத வீடு பேறன் னோர்க்கொரு போது மின்றே.

வெங்கடேசமகத்துவம்.

### 79-ம் (அதி) சிறப்பிலிழிவு.

சிறியவரா முழுமூடர் துரைத்தனமா யுலகாளத்
திறம்பெற் றாலும்
அறிவுடையார் தங்களைப்போ லன்புடையார் புகழுடையா
ராக மாட்டார்
மறிதருமான் மழுவேந்துந் தண்டலைநீ ணெறியாரே
வாரி வாரிக்
குறுணிமைதா னிட்டாலுங் குருடிகண்ணிற் கண்ணாகிக்
குணங்கெ டாதே.

பழமொழிவிளக்கம்.

### 80-ம் (அதி) பத்தி.

என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினு
மன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி
யென்பொன் மணியினை யெய்த வொண்ணாதே.

திருமந்திரம்.

### 81-ம் (அதி) ஓரவழக்கு.

வழக்குடையார் நிற்ப வரும்பொருள் கைவாங்கி
வழக்கை வழக்கழிவு சொல்லின்—வழக்குடையார்
சுற்றமுந் தாமுந் துடைத்தெழுகண் ணீராலே
சுற்ற மிறுமே லிறு.

தமிழ்நாவலர்சரிதை.

ஒன்பானென்பது முற்றும்.

———

# தந்துரை.

——[*]——

இவ்வரும் பெயர் வாய்ந்த ஒன்பானென்பது யாது காரணத்தான் அப்பெயர் பெற்றதோ வெனின்:-இந்நூலுள் கூ X கூ= அக அதிகாரங்களும், எண்பத்தோர் செய்யுட்களும், எண்பத்தோர் நூல்களுமாம்.

இந்நூலில் ஒவ்வோ ரதிகாரத்திற்கும் ஒவ்வோர் செய்யுளாக வொவ்வோர் நூலினின்றும் எடுத்தாளப்பட்டது.

இதுபோற் புறத்திரட்டு, பன்னூற்றிரட்டு, நீதித்திரட்டு, செய்யுட்கலம்பகம், சாரானுபவத்திரட்டு, முதலாய வுளவேனும் அவையெல்லாம் ஒருங்கே ஒருவர் கற்பது அரிதா மாகலானும், அவ்வாறு கற்பினும் ஞாபகத்து நிற்பது கடின மாகலானும் பிறவாற்றானும் இதுவே போதிய நூலாகும்.

இந்நூல் நீதியைப் பயத்தலான் எல்லாப் பண்டிதர்கட்கும் தத்தம் பிரசங்க காலங்களில் சமயோசிதமாக வாண்டாண்டு மேற்கோள்களைக் காட்டற் கேதுவாகும்.

இவ்வாறு பிரசங்கஞ் செய்து வருங்கால் கேட்பார் ஒவ்வொருவரும் பிரமித்து, இப் பிரசங்கியார் எண்பத்தோரரிய பெரிய நூல்களையு மொருங்கே கற்றுணர்ந்தவர்போலுமென நினைத்துப் புகழ்வார்கள்.

மேலும், இந்நூல் ஒவ்வோர் கலாசாலைகளிலும் உயர்தரமாய் வாசிக்கும் ஆண் பெண் பாலார் யாவர்க்கும் எவ்வருடத்தும் உபயோகப்படுவரும்.

இதன் பயனை யானே புகழ்தல் அழகல. வாசிக்கும் மேதாவிகளே கண்டுரை வல்லார்.

எஃதெங்கனமாயினும், இந்நூலுள் ஐஞ்சிறுங்காப்பியம், ஐம்பெருங் காப்பியம், எட்டுத் தொகை, பதினென் கீழ்க்கணை

க்கு முதலாய சங்கநூல்களினும் வேறு பிறநூல்களினும் ஆங்காங்கு அதிகார வடைவே செய்யுட்கள் பிரயோகப்பட்டுவந்ததான் இந்நூன் மாட்சி தெற்றென விளங்கும்.

இந்நூலுள் அருட்பாலுடன் பால் மூன்றாகவும், ஓம்பியலுடன் இயல் மூன்றாகவும் குணந்தழீஇய எண்பத்தோ ரதிகாரங்களாகவும், ஒரோ சில விடங்களில் குற்றந் தழீஇய அதிகாரமாகவும் தொகுத்துளது.

அதிகார வடைவே பொருந்துருச் சில வதிகாரங்கள் பொருந்தா முறணுறினுந் தக்கவாறு பொருத்திக்கொள்க. விரவலெல்லாம் ஒழிபியலிற்று னதிகம்.

இங்ஙனம் நிகழ, காலவளவாகலானும், சிற்சில சந்தர்ப்பங்களானும் வேறு பல்லாற்றானுமாம்.

எல்லாம் பொறுத்தருள்வது நல்லுணர்வுடையோர் கடனாகலான் அங்ஙனமேயாக எல்லாம் வல்ல இறைவனைப் பரவினன்.

☞ சதுரா-அ. சிவசிதம்பரம்.

---

